# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 5 | இதழ் 3 | மே 10, 2018 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 5 | Issue 3 | May 10th, 2018 | Annual Subscription Rs. 100/-



# பகவத் பாதை தமிழ் மாத இதழ்



நாம் சந்திக்கும் நபர்கள் அனைவரும் நமக்கு வேண்டியவர்களாக இருக்க முடியாது. நமக்கு பிடிக்காதவர்களை சந்திக்கும் போது ஏற்படும் மன இறுக்கமும், பாதிப்பும் இயற்கையானவை. அகம் சம்பந்தப்பட்டவை.

அகத்தை அணுக ஒரே ஒரு வழிமுறைதான். அது இயற்கையானது என ஏற்றுக்கொள்வதுதான். ஆனால் புறம் செயல் சம்பந்தப்பட்டது. அதனால் புறத்தை எதிர்கொள்ள நாம் நமக்கு பிடித்தமான ஏதாவது ஒரு கொள்கை - கோட்பாடுகளை வைத்துக்கொள்ளலாம். புறத்தை பொறுத்த அளவில் எதிராளியை ஏதோ ஒரு வகையில் நமக்கு வேண்டியவராக எடுத்துக் கொள்வதன் மூலமும் இதனால் நமக்கு ஏற்படும் கருணை என்னும் நிதானத்தின் மூலமும் சம்பந்தப்பட்ட நபர்களையும் சூழ்நிலையையும் எதிர்கொள்வதுதான் சரியானதாக அமையும்.

– ஸ்ரீ பகவத்

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினராகிய தங்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீபகவத் ஐயா அவர்களின் ஒருநாள் சிறப்பு ஞான முகாம் ஆயிரத்து ஐநூறு அன்பர்கள் கலந்து கொள்ள கூடிய சென்னை தேனாம்பேட்டையில் அமைந்துள்ள காமராஜர் அரங்கில் செப்டம்பர் 2ம் தேதி ஞாயிற்றுக்கிழமை நடைபெற உள்ளது. இது நாம் அனைவரும் அறிந்ததே. இந்த ஞான முகாமை சிறப்பாக நடத்துவது பற்றிய ஒரு கலந்தாய்வு கூட்டம் சென்னையில் மார்ச் 11ம் தேதி ஞாயிற்றுக்கிழமை நடைபெற்றது, இதில் 50 ஆர்வலர்கள் கலந்து கொண்டனர். இந்த நிகழ்ச்சிக்காக நாம் பல செலவுகளை எதிர்கொள்ள வேண்டியுள்ளது. இருப்பினும் இவ்வுண்மை அனைவரையும் சென்றடைய வேண்டும் என்ற நோக்கில் சலுகை கட்டணமாக ஒரு நபருக்கு ரூ 250/- என நிர்ணயித்துள்ளோம். ரூ. 250/- வழங்க முடியாத கலந்து கொள்ள ஆர்வமுள்ள அன்பர்களுக்கு அதனினும் குறைந்த, முடிந்த கட்டணத்தை பெற்றுக் கொண்டு அவர்களும் கலந்து கொள்ள செய்யலாம் எனவும் முடிவு செய்துள்ளோம். இந்நிகழ்ச்சிக்காக நாம் எதிர்கொள்ளும் செலவுகளை பயனடைந்த அன்பர்களின் பங்களிப்பை கொண்டு நிறைவு செய்யலாம் எனவும் முடிவு செய்துள்ளோம். **பல காலமாக அடைவதற்கு அரிதானதாக இருந்த மெய் ஞானத்தை ஸ்ரீபகவத் ஐயா அவர்கள் புரிதலாக எளிமையாக்கி நம் அனைவருக்கும் வழங்கிவிட்டார்கள்.**

இவ்வுண்மையை அனைவருக்கும் எடுத்துச் செல்ல வேண்டியது பயனடைந்த நம் அனைவரின் தலையாய கடமையாக கருத வேண்டுகிறோம்.

மனத்துயரமே புறத்தில் நம்மை முடக்கி துன்பத்தில் ஆழ்த்துகிறது. **மனித குலத்தின் மனத்துயரத்தை போக்க நாம் எடுத்திருக்கும் முதல் மாபெரும் முயற்சி இது ஆகும்.** இம்மாபெரும் முயற்சிக்கு அனைவரும் துணை நிற்க வேண்டுகிறோம். செலவுகளை எதிர்கொள்ள தங்களது பங்களிப்பை வழங்கிய அன்பு உள்ளங்கள்.

திரு. **TMK. தியாகராஜன்**, சென்னை -ரூ. 10,000/-

திரு. **சம்பந்தம் ஐயா - வடிவம்மாள் தம்பதியினர்,** அனைவரின் உணவுக்காக ஆகும் செலவுகள்

திரு. **சபாபதி,** சென்னை -ரூ. 5000/-

திரு. **ராம்லால்,** சென்னை -ரூ. 20,000/-

திரு. **சிவகுரு - உமா சிவகுரு** தம்பதியினர், சென்னை -ரூ. 6000/-

திருமதி **பொற்செல்வி,** சென்னை -ரூ. 2000/-

திரு. **S. கணேஷ்,** சென்னை -ரூ. 25000/-

திரு. **நாகராஜன்,** வெஸ்ட்மாம்பலம், சென்னை -ரூ. 1000/-

இவர்கள் அனைவருக்கும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

வாய்ப்புள்ள அன்பர்கள் தங்களது பங்களிப்பை வழங்குமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

மேலும் ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களாகிய நாம் அனைவரும் கலந்து கொள்வதோடு புதிய அன்பர்கள் அனைவரையும் கலந்து கொள்ள செய்யுமாறு வேண்டுகிறோம். இதற்காக முன் பதிவு தாளை (Ticket) ஸ்ரீபகவத் மிஷனோடு தொடர்புகொண்டு பெற்றுக் கொள்ளலாம். இத்தொண்டில் தங்களை இணைத்துக் கொள்ள ஆர்வமுள்ள அன்பர்கள் 50 Tickets கொண்ட புக்கை பெற்று மற்றவர்களுக்கும் வினியோகிக்கலாம். அனைவரது ஒத்துழைப்பையும் வழங்க வேண்டுகிறோம்.

**ஸ்ரீ பகவத் மிஷன், 9994205880, 97891 65555**

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555

www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



This book Designed by

SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075



# எனக்குப் பிடிக்காதவர்களை எதிர்கொள்வது எவ்வாறு?



- ஸ்ரீ பகவத்

"எனக்குப் பிடிக்காதவர்களைக் கண்டால் எனது மனமும் உடலும் ஒரு வகையில் இறுகிக் கொள்கிறது. எனக்குப் பிடிக்காதவர்களை நான் எவ்வாறு எதிர்கொள்வது?"

- அன்பர் ஒருவர் இவ்வாறு தனது பிரச்சினையை முன் வைத்தார்.

இது அவருக்கு மட்டும் உள்ள தனிப்பட்ட பிரச்சினையா?

நாம் ஒவ்வொருவரும் ஏதோ ஒரு பிரச்சினையை தினமும் எதிர்நோக்கிதான் உள்ளோம்.

நாம் சந்திக்கும் நபர்கள் அனைவரும் நமக்கு வேண்டியவர்களாக இருக்க முடியுமா?

நாம் சந்திக்கும் சூழ்நிலைகள் அனைத்தும் நமக்குச் சாதகமான சூழ்நிலையாக இருக்க முடியுமா?

அவர்கள் - அவை பலவிதமான அம்சமாகத்தான் இருக்க முடியும்.

அவர்கள் அனைவரையும் நமக்கு வேண்டியவர்களாக மாற்ற முடியுமா?

சூழ்நிலைகள் அனைத்தையும் நமக்குச் சாதகமாக மாற்ற முடியுமா?

அவர்களை நாம் எவ்வாறு எதிர்கொள்வது?

அந்தச் சூழ்நிலைகளை எவ்வாறு எதிர்கொள்வது?

நாம் நமது அணுகுமுறையை அகம், புறம் எனப் பிரித்துள்ளோம்.

நாம் மேலே விவரித்த பிரச்சினைகள் அகத்தைச் சார்ந்ததா அல்லது புறத்தைச் சார்ந்ததா?

நாம் சந்திக்கும் நபர்களும், சூழ்நிலைகளும் புறத்தைச் சார்ந்ததாகும்.

ஆனால் அவற்றால் ஏற்படும் நமது மன உணர்ச்சிகள் யாவும் அகத்தைச் சார்ந்தவை.

இப்போது நாம் எதற்குத் தீர்வு கேட்கிறோம்?

அகப் பிரச்சினைக்குத் தீர்வு கேட்கிறோமா?

அல்லது புறப்பிரச்சினைக்குத் தீர்வு கேட்கிறோமா?

இங்கு எது நமது பிரச்சினை?

புறத்திலுள்ள நபர்களும், புறச்சூழ்நிலைகளுந்தான் பிரச்சினையா?

அல்லது அவர்களால் - அவற்றால் ஏற்பட்ட நமது மன உணர்ச்சிகள் தாம் பிரச்சினையா?

நம் மனதிலும் உடலிலும் அப்படி ஒரு இறுக்கம் ஏற்படாவிட்டால் நாம் இதனை ஒரு பிரச்சினை என்று கூற மாட்டோம்.

அப்படியானால் இது நம் மனம் சம்பந்தப்பட்ட அகப்பிரச்சினை தானா?

அல்லது இது புறப்பிரச்சினையா?

ஏனெனில் புறக்காரணிகளால் தாம் இந்த அக உணர்ச்சிகள் ஏற்பட்டுள்ளன.

இங்கு என்ன தீர்வு தேவைப்படுகிறது?

நாம் செய்ய வேண்டுவது என்ன?

அகத்தை நாம் சீரமைக்க வேண்டுமா?

அல்லது புறநிகழ்வுகளைச் சீரமைக்க வேண்டுமா?

அக உணர்ச்சிகளைப் பொறுத்த வரையில் - அகத்தைப் பொறுத்த வரையில்

நாம் செய்வதற்கு எதுவுமே இல்லை.

அவை அனைத்தையும் இயற்கையானது என்று எடுத்துக் கொண்டால் போதும்.

நம்முடைய மன இறுக்கத்தையும், உடல் இறுக்கத்தையும் இயற்கையானது என எடுத்துக் கொண்டால் போதும்.

இப்படி எடுத்துக்கொண்டால் மட்டும் போதுமா? நமது அனைத்துப் பிரச்சினைகளும் தீர்ந்து விடுமா?

ஒருவர் நம் மீது கல் வீசிக் கொண்டிருக்கிறார். கல்லடி பட்டு நமக்கு வலி ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது.

கல்லடி பட்டதால் ஏற்படும் வலி இயற்கையானதுதான் என எடுத்துக் கொள்வதால் நமது பிரச்சினைகள் தீர்வடைந்து விடுமா?

பிரச்சினைகளைச் சந்திக்கும் போது நமக்கு ஏற்படும் மன இறுக்கத்தை ஏற்றுக் கொள்வதன் மூலம்

நமது பிரச்சினைகள் முடிவுக்கு வந்து விடுமா?

அகத்தைப் பொறுத்த வரையிலும் அக உணர்வுகளை அப்படியே ஏற்றுக் கொள்வது சரியானதுதான்.

ஆயினுங்கூட அது புற நிகழ்வுகளோடு பின்னிப் பிணைந்திருப்பதால் புறத்தை எவ்வாறு எதிர்கொள்வது என்பதையும் ஆய்வுக்கு எடுப்பது அவசியமாகிறது.

புறத்தை எவ்வாறு எதிர்கொள்வது? நமக்கு வேண்டாதவரை எப்படி எதிர்கொள்வது? நமக்கு வேண்டாத சூழ்நிலைகளை எவ்வாறு எதிர்கொள்வது?

புறத்தைப் பொறுத்த வரையிலும் நமது செயல்பாடுதான் முக்கியம்.

நாம் நடந்து போகும் வழியில் நாகப்பாம்பொன்று சீறிக் கொண்டு வருகிறது.

நமக்கு பயம் ஏற்படுகிறது.

அகத்தில் ஏற்பட்ட பயத்தை இயற்கையானது என ஏற்றுக் கொள்வதால் மட்டும் பிரச்சினை முடிந்து விடாது.

அதைப் பயன்படுத்தி செயலிலும் இறங்க வேண்டும்.

ஒன்று பாம்பிடமிருந்து தப்பிச் செல்ல வேண்டும். அல்லது அதனை விரட்டி விட வேண்டும்.

நமக்கு வேண்டாதவர்களைக் காணும்போது மன இறுக்கம் ஏற்படுகிறது. இங்கு செயலளவில் நாம் என்ன செய்வது?

பாம்பிடமிருந்து தப்பிச் செல்வது போல் அவரிடமிருந்தும் தப்பிச் செல்ல வேண்டுமா?

அவருடன் உங்களுக்கு எந்த வேலையும் இல்லையென்றால் நாம் சுலபமாக அவரிடமிருந்து விலகிச் சென்று விடலாம்.

ஆனால் அவரோடு சம்பந்தப்பட்ட தொழிலை உடனடியாக முடித்துக் கொள்ள முடியாது.

ஆகவே அவரிடமிருந்து விலகிச் செல்லவும் முடியாது.

இந்நிலையில் அவரை நாம் எவ்வாறு எதிர்கொள்வது? அந்தச் சூழ்நிலையை எவ்வாறு நாம் கையாள்வது?

அகத்தை அணுக ஒரே ஒரு வழிமுறைதான். அது இயற்கையானது என ஏற்றுக் கொள்வதுதான்.

ஆனால் புறத்தை எதிர்கொள்ள நாம் நமக்குப் பிடித்தமான ஏதாவது ஒருகொள்கை - கோட்பாடுகளை வைத்துக் கொள்ளலாம்.

அந்தக் கொள்கைகளும், கோட்பாடுகளும் உண்மையானவையாக இருந்தாலும் சரி

அல்லது நமது நம்பிக்கைகளை அடிப்படையாக் கொண்டிருந்தாலும் சரி.

ஏதாவது ஒரு கொள்கை கோட்பாடுகளை உதவிக்கு அழைத்திடுவதின் மூலம்

பிரச்சினையான அந்தச் சூழ்நிலையின் இறுக்கம் கூட ஓரளவு தளர்ந்து விடுகிறது.

இது போன்ற கேள்வியை முன்வைத்து நாம் ஏற்கனவே மைத்ரி, கருணா, உபேச்சா எனும் கருத்துகளை எடுத்துக் கூறியது நினைவுக்கு வருகிறது.

மைத்ரி என்றால் உறவு, கருணா என்றால் கருணை, உபேச்சா என்றால் விலகி இருப்பது.

நம் வீட்டு கண்ணாடி பீரோவை பக்கத்து வீட்டுச் சிறுவன் கைகளால் ஓங்கி அடித்துக் கொண்டிருந்தால்

பீரோ உடைந்து விடுமோ என்று பயப்படுவோம்.

அதே நேரம் அப்படி அடித்துக் கொண்டிருப்பது நமது குழந்தையாக இருக்கும் பட்சத்தில்

கண்ணாடி உடைந்து குழந்தைக்குக் காயம் எதுவும் ஏற்பட்டு விடக்கூடாதே என்ற ஆதங்கமும் ஏற்பட்டு விடும்.

அதனால் நமக்கு வேண்டாதவராக இருப்பவரை நமது உறவினராக பாவித்துக் கொள்ள வேண்டும். அதன் மூலம் அவருக்கும் நமக்கும் இடையே உள்ள முரண்பாடுகளும். நெருடல்களும் தளர்வடைந்து விடும்.

"மைத்ரி என்ற வார்த்தைக்கு நட்பு என்று பொருள் கொடுத்தால் இன்னும் சரியாக இருக்கும்" என அன்பர் ஒருவர் தெரிவித்தார்.

நட்பைப் பெரிதாகக் கொள்பவர்கள் அப்படி எடுத்துக் கொள்ளலாம்.

அடுத்தவருக்கும் நமக்கும் உறவைக் கொடுக்க வேண்டும்.

அதுதான் முக்கியம். நமது நண்பர் நமக்கு எதிராகச் செயல்படுவாரேயானால் நட்பைக்கூட முறித்துக் கொள்ளத் தயாராகி விடுவோம்.

நமது குழந்தை நமக்கு எதிராகச் செய்யும் தவறுகளை நாம் சுலபமாக மன்னித்து விடுவோம்.

அதனால் நமக்கு வேண்டாதவரை நமது அன்புக்குரிய உறவினராகக் கருதுவது எளிதாக உதவி புரியும்.

முற்பிறவி சம்பந்தப்பட்ட செய்திகளைக் கூறும் நூல் ஒன்றை முன்பு ஒரு முறை படிக்க நேர்ந்தது.

அதில் கணவனால் பாதிக்கப்பட்ட மனைவி பரிகாரம் நாடி, தீர்க்கதரிசனம் உடைய ஒருவரின் உதவியை நாடுகிறார்.

"உனக்குக் கணவனாக இருப்பவன் முற்பிறவியில் உனக்கு மகனாக இருந்தவன்", என்று அவர் கூறுகிறார்.

இது உண்மையாகவும் இருக்கலாம்.

முற்பிறவி பற்றிய செய்திகள் நமக்குத் தெரியாது.

உங்களுக்கு பிரச்சினை கொடுப்பவர் முற்பிறவியில் உங்களுடைய மகனாகவோ, மகளாகவோ இருந்திருக்க மாட்டார் என்பது என்ன நிச்சயம்?

அப்படி ஒருவராக அவரை நீங்கள் கருதுவது நீங்கள் எதிர்கொள்ளும் பிரச்சினையின் வீரியத்தை ஓரளவு சமன் செய்து விடும்.

இது போல் நாம் கருணையோடு நடந்து கொள்ள வேண்டும் என முடிவெடுப்பது, நம்முடைய இறுக்கத்தைக் குறைத்து நம்மை எளிமையாக்கும்.

உபேச்சா எனும் விலகியிருக்கும் அணுகுமுறை புறத்துக்காகக் கூறப்பட்டாலும்

உண்மையில் அது அகம் சார்ந்த ஒன்றேயாகும்.

புறச்செயல்களையும், புறச்சூழ்நிலைகளையும் நம்மால் புறக்கணிக்க முடியாது,

நமக்குப் பிடிக்காதவர் நமது மேலதிகாரியாக வந்து விட்டார் என்பதற்காக வேலையை விட்டுவிட்டுத் தப்பி ஓடி விட வேண்டுமா?

புறத்தளவில் இப்படித் தப்பி ஓட ஆரம்பித்தோமேயானால் நம்மால் எந்த வேலையிலுமே ஈடுபட முடியாது.

அகத்தளவில் விலகியிருத்தல் என்றால் என்ன?

கிட்டத்தட்ட கீதையில் கூறியபடி, "கடமையைச் செய், பலனில் பற்று வையாதே" என்னும் கூற்றுப்படிதான்.

**பலன் என்பது செயலின் விளைவு. வெற்றியை எதிர்பார்க்காமல் தொழில் செய்ய முடியுமா?**

தேர்ச்சி அடைவதை எதிர்பாக்காமல் மாணவனால் பாடங்களைப் படிக்க முடியுமா?

**பலன் என்பது செயலின் விளைவை மட்டும் குறிக்கவில்லை.**

**நாம் செயலாற்றும் ஒவ்வொரு கணத்திலும்,**

**அந்தச் செயல் சம்பந்தமான மனோ இயக்கம் ஓர் எதிர்விளைவாக ஏற்பட்டுக் கொண்டே இருக்கும்.**

**அந்த எதிர்விளைவுகள் நமது புறச்செயலுக்குத் தேவையில்லாத பட்சத்தில்**

**அந்த அக இயக்கத்தை கண்டு கொள்ளத் தேவையில்லையென அதனை விட்டு விலகியிருப்பதே உபேச்சா ஆகும்.**

**தேவையற்ற மன உணர்ச்சிகளினால் நம் உடலில் ஏற்படும் பிரச்சினைகளை-உபாதைகளை எவ்வாறு எடுத்துக் கொள்வது?**

**தேவையற்ற அக இயக்கங்களை அசட்டை செய்வதுதான் உபேச்சா ஆகும்.**

உடலில் ஏற்படும் உபாதைகள் எவையும் உபாதையல்ல.

மன உணர்ச்சிகளினால் நம் உடலில் ஏற்பட்ட இரசாயன மாற்றங்களைச் சீரமைக்கும் மருத்துவராகவே இந்த உபாதைகள் ஏற்பட்டுள்ளன.

அதனால் உபாதை வடிவில் வருகை புரிந்துள்ள மருத்துவரைப் பார்த்து கலவரமடையத் தேவையில்லை.

தேவையான சமன்பாடுகள் ஏற்பட்ட நிலையில் அந்த மருத்துவரும் மறைந்து விடுவார்.

ஆகவே, அகத்தைப் பொறுத்த அளவில்

அக உணர்ச்சிகளிலிருந்து விலகியிருப்பதும், புறத்தைப் பொறுத்த அளவில் எதிராளியை ஏதோ ஒரு வகையில் நமக்கு வேண்டியவராக எடுத்துக் கொள்வதும்,

இதனால் நமக்கு ஏற்படும் கருணை என்னும் நிதானத்தின் மூலம்,

சம்பந்தப்பட்ட நபர்களையும், சூழ்நிலையையும் எதிர்கொள்வதுதான் சரியானதாக அமையும்.



# ஸ்ரீ பகவத் பவன்
# புரவலர்கள்

அன்பு உள்ளங்களுக்கு ஓர் அன்பான வேண்டுகோள்.

ஸ்ரீ பகவத் மிஷன் என்பது பணப்புழக்கம் மிகுந்த ஒரு கார்ப்பரேட் நிறுவனம் அல்ல. கட்டணம் வாங்கிக் கொள்ளும் கல்வி நிறுவனமும் அல்ல. ஐயா அவர்களுக்கு தங்கியிருக்க வீடு ஒன்று தேவைப்பட்டது. நம் அனைவரது ஒத்துழைப்பாலும் **ஸ்ரீ பகவத் பவன்** உருவானது. தற்போது அந்த இல்லம் ஐயாவின் இருப்பிடமாகவும், கற்றிட வருவோரின் குருகுலமாகவும், நம் அனைவரது பண்ணை வீடாகவும் செயல்பட்டு வருகிறது. ஸ்ரீ பகவத் பவனின் நித்திய நிர்வாகச் செலவினங்களுக்கான நித்திய நிதி ஒன்றும் தேவைப்படுகிறது.

'நிரந்தர வைப்பு நிதி எதனையும் தற்போது உருவாக்க வேண்டாம்' என்று ஐயா கூறிவிட்டதால் நிரந்தரப் புரவலர் குழு ஒன்றை உருவாக்க முடிவு செய்துள்ளோம். முதற்கட்டமாக 100 ஆர்வலர்கள் கொண்ட புரவலர் குழு ஒன்று மே மாதம் முதல் தொடங்கப்பட்டுள்ளது. அதன்படி ரூ. 1000/- முதல் ஏதாவது ஒரு தொகையை மாதந்தோறும் அல்லது ரூ. 12,000/- முதல் ஏதாவது ஒரு தொகையை வருடந்தோறும் வழங்கும் ஆர்வம் உள்ளவர்கள் தங்களை ஸ்ரீ பகவத்பவனின் புரவலர்களாக இணைத்துக் கொள்ளலாம். **அதற்காக ஏற்றுக்கொண்ட முழுத்தொகையையும் மாதந்தோறும் வழங்கியே ஆகவேண்டும் என்ற நிபந்தனை எதுவும் புரவலர்களுக்குக் கிடையாது.**

நமது வேண்டுகோளை ஏற்று இம்மாதத்தில் புரவலராக இணைந்தவர் திரு. **Dr. சுகுமார்,** நாகர்கோயில், திரு. **தர்மராஜ்,** கல்பாக்கம், திரு. **J. இரவிசந்திரன்,** விழுப்புரம் புரவலர்களாக தங்களை இணைத்துக் கொண்ட அனைவருக்கும் ஸ்ரீபகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக்கொள்கிறோம். வாய்ப்புள்ளவர்கள் புரவலர்களாக இணைந்து உதவிட வேண்டுகிறோம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem** என்ற கணக்கில் செலுத்தலாம். **Bank A/c-** ல் நேரடியாக செலுத்தியவர்கள் தகவலை **97891 65555** என்ற எண்ணிற்கு தெரிவிக்க வேண்டுகிறோம்.



# கேள்வி? பதில்...

மனம், உடல் இரண்டும் ஒன்றா? வேறா?



**V.A.P. சரவணன்,** சேலம்.
செல் : 99942 05880

**கேள்வி :** நம்முடைய மன உணர்வுகளைச் சீரமைக்கும் வல்லமை நமது அறிவுக்கு கிடையாது என்ற அறிவின் இயலாமையை நாம் அறிவுப்பூர்வமாகப் புரிந்து கொள்வது தான் ஞானம் என்பதை விளக்கிக் கொண்டேன். நமது அறிவுக்கு அகத்தில் வேலை இல்லை. புறச்செயலை எதிர்கொள்ள நிர்வாகம் செய்வதற்காகதான் அறிவு என்பதை புரிந்து கொண்டு மன விடுதலையுடன் இருந்து வருகிறேன். மனோரீதியான இந்த புரிதல் உடல் இயக்கத்திற்கு எந்த அளவிற்கு உதவி செய்கிறது? இந்த மனப் புரிதலை உடலின் இயக்கத்தோடு எவ்வாறு பொருத்தி பார்ப்பது? மனதைப் பற்றிய ஒரு புரிதல் இருப்பது போல் உடல் இயக்கத்திலும் ஏதாவது புரிதல் உள்ளதா? உள்ளது எனில் அதை எப்படி விளங்கிக் கொள்வது?

**பதில் :** மனமும் உடலும் பேசும் மொழி ஒன்றே. உடலும் மனமும் ஒரே மாதிரியே செயல்படுகிறது. மனதின் திட வடிவமே உடல். மனதில் ஏற்படும் அத்தனை எண்ணங்களுமே உடலில் உணர்வாக வெளிப்படும். மனதில் எண்ணங்களை உணர்வது சூக்கும வடிவம், உடலின் மூலம் உணர்வது திட வடிவம். மன உணர்வுக்கு ஏற்ப உடலில் இரசாயன மாற்றமாகி உடல் உணர்ச்சியாக வெளிப்படும். மனதினால் உணர முடியாத உணர்வுகளை நாம் உணர்வு என்று குறிப்பிடுவதில்லை. அதே போல் உடலில் நம்மால் உணர முடியாத இரசாயன மாற்றத்தைதான் உடல் இருப்பது தெரியாமல் இருக்கிறது என்று குறிப்பிடுகிறோம். மனதின் இயலாமையை நாம் புரிந்து கொண்டதை போலவே உடல் நிலையின் செயல்பாட்டையும் புரிந்து கொள்வோமாக.

மனதின் செயல்பாட்டை நாம் அகம், புறம் என்று பிரித்து புரிந்து கொள்கிறோம். நமது அக இயக்கத்தில் நமது அறிவுப் பகுதிக்கு எந்த ஒரு வேலையும் இல்லை என்பதை நமது அறிவு பகுதியே புரிந்து கொண்டு அக இயக்கத்தின் சுதந்திரமானச் செயல்பாட்டில் எந்த ஒரு குறிக்கீடும் செய்யாது தனது இயலாமையை உணர்ந்து கொண்டு விடுபடுவதே ஞானம்.

நமது அறிவு தனது இயலாமையை உணர்ந்து கொண்டு மன இயக்கத்தின் செயல்பாட்டில் குறுக்கிடுவதிலிருந்து விடுபடுகிறது. மனோ இயக்கம் தங்கு தடையின்றி சுதந்திரமாக இயங்குகிறது. அங்கு எல்லா உணர்வுகளும் தோன்றி மறைந்து பிரவாகித்து செல்கிறது. ஓடிக்கொண்டிருக்கும் ஓர் ஆற்றை போல் எந்த தேக்கமும் இன்றி எல்லா எண்ண, உணர்வுகளும் ஓடி மறைந்துவிடுகின்றன.

மனதில் தாமாக தோன்றும் எண்ணங்களை நமது அறிவுப் பகுதி "இப்படி இருக்கக் கூடாது, இது போய்விட வேண்டும்" என்று ஏதோ ஒரு வகையில் முரண்படும்போது மனப்போராட்டம் ஏற்படுகிறது. தொடர் மனப்போராட்டம் தேக்கமாகி உடலில் இரசாயன மாற்றத்தை ஏற்படுத்துகிறது. அப்படி ஏற்படும் இரசாயன மாற்றத்திற்கு நாம் ஏதாவது ஓர் உபாதை, நோய் என்று பெயர் குறிப்பிடுகிறோம்.

மனதை சரிசெய்ய, மனதை பயன்படுத்த முடியாது என்ற புரிதலை அகத்திற்கும், மனதை புறக்காரியத்திற்கு பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற புரிதலை புறத்திற்கும் பயன்படுத்திக் கொண்டு வாழ்வதே சிறந்த வாழ்வு முறை ஆகும்.

உடலிலும் அகம், புறம் என்று இரண்டாக பிரிந்து புரிந்து கொள்வோம். நமது உடலின் சுதந்திரமான அக இயக்கத்தில் நமது அறிவு பகுதிக்கு எந்த ஓர் வேலையும் இல்லை என்பதை நமது அறிவே புரிந்து கொள்ளும்போது உடலே தன்னைத்தானே சரி செய்து கொள்கிறது.

பொதுவாக நாம் உண்ணும் உணவுகளை உடலே ஜீரனமாக்கி உடலுக்கு தேவையான சக்திகளை பிரித்து, கழிவுகளை உடல் கழிவாக வெளியேற்றுகிறது. இத்தனை வேலைகளையும் சரியாக செய்யும் உடலின் அறிவிற்கு, உடலில் ஏற்படும் உபாதைகளை மட்டும் சரி செய்யத் தெரியாதா? அதற்கு முன்பாகவே நமது அறிவு பகுதி உடல் உபாதைக்கு தீர்வு செய்கிறேன் என்று 'இதை செய்ய வேண்டும், அதை மாற்ற வேண்டும்' என்று கட்டளை இடத் தொடங்கிவிடுகிறது. உடல் சரியில்லாத போது உடல் நிலைக்கு எந்த மாதிரி சூழ்நிலையை உருவாக்கி கொள்ளலாம், என்ன மாதிரி உணவுகளை எடுத்துக்கொள்ளலாம் என்ற புற விசயத்தில் அறிவு பகுதி செயல்படுவது தவறு இல்லை. உடல் உபாதைகளை சரி செய்ய முயல்வது தான் தவறாகி விடுகிறது.

மனம், உடல் தொடர்பினை ஓர் எளிய உதாரணத்தின் மூலம் புரிந்து கொள்வோம். மரம் என்பது மண்ணுக்கு மேலே தெரிவது. மரத்திற்கு ஆதாரமான வேர்பகுதி என்பது மண்ணுக்கு மேலே தெரியாமல் அடியில் இருக்கும். மரம் நன்றாக இருக்கிறது என்றால் அதன் வேர்பகுதி ஆரோக்கியமாக இருக்கிறது என்பது தான் பொருள். வேரில் ஏற்படும் எந்த ஒரு பாதிப்பும் மரத்தை பாதிக்கும். கடும் காற்றினாலோ, சூறாவளியாலோ கடுமையான வெப்பத்தினாலோ மரம் பாதித்தாலும் அதன் வேர் பகுதி ஆரோக்கியமாக இருக்கும்போது வெகு விரைவாக தன்னுடைய இயல்பான நிலையை மரம்

அடைந்து விடும்.

இதில் மரம் என்பது உடல், மனம் என்பது வேர் ஆகும். மனதில் ஏற்படும் முரண்பாடே உடலில் நோயாக பிரதிபலிக்கிறது. உடலின் வளர்ச்சிக்கு என்ன தான் ஆரோக்கியமான உணவுகளை எடுத்துக்கொண்டாலும் மனம் ஆரோக்கியமாக இல்லாத போது உடலில் ஆரோக்கியம் ஏற்படப்போவது இல்லை. மனம் முரண்படாமல் இயற்கையான பிரவாக நிலையில் இயங்கும்போது உடலும் இயங்குவது தெரியாமல் இயங்கும். ஆரோக்கிய தன்மையில் இருக்கும்.

**மனதில் ஏற்படும் பல்வேறு உணர்வுகளான கோபம், பயம், வெறுப்பு, கவலை, பொறாமை போன்றவைகளை போல் தான் உடலில் ஏற்படும் காய்ச்சல், வலி, வேதனை, இருமல், சளி, வாந்தி, பேதி என அனைத்தும் ஆகும். நமது அறிவு மன இயக்கத்தில் குறுக்கிடாத போது அத்தனை உணர்வுகளும் தோன்றி மறையும் இயற்கையான தன்மைக்கு வந்துவிடுகிறது. நமது அறிவு அதே போல் உடல் இயக்கத்தில் குறுக்கிடாத போது எத்தனை உடல் உபாதைகள் இருந்தாலும் அவை நமது உடலை விட்டு வெகுவிரைவாக உடல் கழிவாக வெளியேறிவிடுகிறது. உடல் உபாதைகள் அனைத்தும் உடலின் இயக்கத்தில் ஓர் மருத்துவராகவே செயல்பட்டு உடலை ஆரோக்கியமடைய செய்கிறது. உடல் உபாதைகளுக்கு நாம் மருத்துவம் செய்வதும், நமது கோபத்தை நிர்வாகம் செய்வதும் ஒன்றே.**

இயற்கையின் இயக்கமான சமநிலையை ஏற்படுத்துவதையே மனம், உடல் என்ற இரண்டு இயக்கங்களும் செய்து கொண்டு இருக்கின்றன. பாத்திரத்தில் உள்ள தண்ணீரில் ஏற்படும் அலைகள் என்பது தண்ணீர் மீண்டும் சமநிலை அடைவதற்கான செயல்பாடே தவிர தண்ணீரின் சமநிலையை குலைப்பதற்கான செயல்பாடு இல்லை என்பதை நாம் தெளிவாக விளங்கி கொள்ள வேண்டும்.

தண்ணீரில் ஏற்படும் அலைகளைப் போன்றது தான் மனம், உடலில் ஏற்படும் எண்ண, உணர்வுகள் ஆகும். உடலில் ஏற்படும் பல்வேறு உபாதைகள் அனைத்தும் உடல் சமநிலையை ஏற்படுத்துவதற்காக வந்துள்ளது என்பதை நமது அறிவு புரிந்து கொண்டு மன, உடல் இயக்கத்தில் குறுக்கிடுவதிலிருந்து விடுபட வேண்டும். மன இயக்கத்தில் அறிவு குறுக்கிடாத போது மனதில் எல்லா எண்ண உணர்வுகளும் தோன்றி மறையும் பிரவாகத் தன்மைக்கு வந்துவிடும். உடலில் ஏற்படும் உபாதைகளை அறிவு கண்டு கொள்ளாத போது உடல் இயங்குவது தெரியாமல் இயங்கும் ஆரோக்கியத் தன்மைக்கு மாறிவிடும்.

உடலில் வெளிபடும் உபாதைகள் அனைத்தும் மீண்டும் உடலை ஆரோக்கியத்தின் பக்கம் திருப்புவதற்காக உடல் செய்யும் சமநிலையே ஆகும். உடல் உபாதைகள் அனைத்தும் உடலை விட்டு வெளியேறும் உடல் கழிவுகள் என்பதை நமது அறிவு புரிந்து கொள்ளும்போது உடலில் வெகு விரைவாக ஆரோக்கியத்தின் பக்கம் திரும்பிவிடும்.

மனோ இயக்கத்தின் அத்தனை செயல்பாடும், உடல் இயக்கத்தில் வெளிப்படும். நமது அறிவுக்கு மன இயக்கத்திலும், உடல் இயக்கத்திலும் எந்த ஒரு வேலையும் இல்லை என்பதை புரிந்து கொள்ளும் போது மனமும், உடலும் அதன் இயற்கையான தன்மைக்கு திரும்பும்.

**பிறகு அறிவுக்கு என்னதான் வேலை இருக்கிறது? ஒரு பய உணர்வு அகத்தில் ஏற்படும்போது, அதனை நிர்வாகம் செய்யாமல் புறத்தில் செயலாக சரியாக செய்வதற்கு பய உணர்வையே தூண்டுகோலாகப் பயன்படுத்திக் கொள்ளலாம்.**

**அதே போல் ஓர் உடல் உபாதையின் போது, உதாரணமாக அஜீரணத்தால் ஏற்படும் வயிற்று வலியின்போது அந்த வயிற்று வலியை அகற்ற அறிவு முயலாமல் புறத்தில் உணவு எடுக்க வேண்டுமா? வேண்டாமா? அல்லது எந்த மாதிரி எளிமையான உணவு எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதில் அறிவு செயல்படுவதே சரி.**

**மனதில் தோன்றும் எண்ண உணர்வுகள் எப்படி தாமாகவே மறைந்து விடுகின்றனவோ அதேபோல் உடலில் தோன்றும் உபாதைகளும் உடலை சரிசெய்துவிட்டு தாமாகவே மறைந்துவிடுகின்றன.**

# ஸ்ரீ பகவத் பவன்

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் பவனை நிர்வகிப்பதற்கும் ஐயாவை சந்திக்க வருபவர்களின் எண்ணிக்கை அதிகரிப்பதாலும் நாம் மேலும் பல செலவுகளை எதிர்கொள்ள வேண்டியுள்ளது.

நாம் எதிர்கொள்ளும் செலவுகளை ஸ்ரீ பகவத் மிஷனுக்கு வரும் நன்கொடைகளையும் நிறுவனர்கள் மற்றும் புரவலர்களின் பங்களிப்பையும் கொண்டு மட்டுமே எதிர்கொண்டு வருகிறோம். அந்த வகையில் ரூபாய் **25,000/-** வழங்கி ஸ்ரீ பகவத் பவனின் நிறுவனராக தங்களை இணைத்துக்கொண்ட திரு. **E. மோகன்,** சென்னை, கோவி திரு. **இரவி,** கரூர் ஆகிய இருவருக்கும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். பகவத் ஐயாவின் கருத்துகளை புரிந்து கொண்டவர்களும் அனைவருக்கும் எடுத்துச் செல்ல வேண்டும் என்ற ஆர்வமுள்ளவர்களும் வாய்ப்புள்ளவர்களாக இருக்கும் பட்சத்தில் நன்கொடைகளை வழங்கி நிறுவனர்களாகவும், புறவலர்களாகவும் இணைந்து ஸ்ரீ பகவத் மிஷனின் தொண்டில் தங்களையும் இணைத்துக் கொள்ளுமாறு பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

அன்புடன்
Sri Bagavath Mission

# ஆசிரியர் பகுதி

K.S. ஜீவமணி
செல் : 97891 65555

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்.

மனப் பிரச்சினையில் இருந்து விடுபடுவதற்கு ஞானமும் விடுதலையும் மிகவும் அவசியம்.

உண்மையில் மனதின் இயற்கையான இயக்கமே விடுதலையில் இயங்குவதுதான். நமது தேவையற்ற முரண்பாடே விடுதலைக்கு இடையூறாக பிரச்சினையை ஏற்படுத்துகிறது.

இந்த உண்மையைப் புரிந்துகொள்வதே மெய்ஞானம். மெய்ஞானம் பெற தியானமோ, மூச்சுப் பயிற்சியோ தேவையில்லை. மனதின் இயக்கத்தைப் பற்றிய புரிதல் மட்டுமே தேவை. இங்கு புரிந்து கொண்டதை செயல்படுத்த தேவையில்லை. உண்மை என்பது என்றும் புத்தம் புதியதாக நிகழ்காலத்தில் நிகழ்ந்து கொண்டிருப்பது. அதனை செயல்படுத்த முற்படும்போதுதான் முரண்பாடு தோன்றுகிறது.

இதுவரை வந்த ஞானிகள் அனைவரும் ஏதோ ஒரு வகையில் தன்னை முழுமையாக ஏற்றுக்கொண்டதால் அகச் சரணாகதியில் ஞானமும் விடுதலையும் பெற்றார்கள். ஆனால் அவர்கள் அடைந்த ஞானத்தின் அறிவியலை மற்றவர்களுக்கு முழுமையாக விளக்க முடியவில்லை. ஞானத்தையும் அனுபவம் கலந்த நிலையாகவே கூறிவிடுகிறார்கள்.

உண்மையில் ஞானம் என்பது ஓர் அனுபவம் அல்ல. புத்திபூர்வமான புரிதல் மட்டுமே.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் தான் அடைந்த ஞானத்தின் அறிவியலை கண்டறிந்து புரிதலாக்கி விளக்கி வருவதால் ஆர்வமுள்ள அனைவரும் ஞானம் பெறுவது எளிதாகிவிட்டது. ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் இந்த வழிமுறை உலகின் மிக உயர்ந்த கண்டுபிடிப்பாகவும் அதே நேரம் அனைவரும் ஞானம் பெறும் அளவிற்கு எளிதாகவும் அமைந்துள்ளது.

ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞானமுகாமில் கலந்து கொள்பவர்கள் 100% ஞானத்தெளிவு பெறுவது சாத்தியமாகி உள்ளது.

அந்த வகையில் ஏப்ரல் மாதம் 28, 29 & 30 தேதிகளில் ஏற்காட்டில் நடைபெற்ற ஞானமுகாமில் கலந்துகொண்டவர்கள் அனைவரும் ஞானத்தெளிவுடனும் மகிழ்வுடனும் திரும்பிச் சென்றனர்.

மேலும் ஏற்காட்டில் ஏப்ரல் மாதம் 13, 14, 15 தேதிகளில் நடைபெற்ற அஃகு ஹீலர் அ. உமர்பாரூக் அவர்களின் அல்ட்ரா மைண்ட் என்னும் அஃகு ஹீலர்களுக்கான பயிற்சி வகுப்பில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் ஞானப் புரிதலைப் பற்றி சிறப்புரை ஆற்றினார்கள். இதில் கலந்து கொண்ட அனைவருக்கும் ஸ்ரீபகவத் ஐயாவின் "மனதில் உறுதி வேண்டாம்" என்ற புதிய நூலினை இலவசமாக வழங்கப்பட்டது. இதனை ஏற்பாடு செய்த அஃகு ஹீலர் அ. உமர்பாரூக் அவர்களுக்கு பாராட்டுகளையும் நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

மேலும் ஸ்ரீ பகவத் பவனில் மே மாதம் பள்ளி மாணவர்களுக்கான வாழ்வியல் முகாமும், ஜூலை மாதத்தில் ஓர் ஞானமுகாமும் நடைபெறவுள்ளது.

அகத்தில் துயரங்களை துறந்து புறத்தில் உயரங்களை பெற ஞானம் மிகவும் அவசியம். ஞானத்தை புரிந்துகொள்வோம். புரிதலை உலகிற்கே பகிர்வோம்.

# நிகழ்ச்சி நிழல்கள்



ஏற்காட்டில் நடைபெற்ற அஃகு ஹீலர்களுக்கான Altra Mind பயிற்சி வகுப்பில்
கலந்து கொண்டவர்களுடன் ஸ்ரீ பகவத் ஐயா
மற்றும்
அக்கு ஹீலர் அ. உமர்பாரூக்



ஐயாவின் பேரன் மாஸ்டர் அபிநவ்
பிறந்தநாள் கொண்டாடியபோது



ஐயாவுடன் புரவலர் திரு. தர்மராஜ்
கல்பாக்கம் அவர்கள்



ஐயா அவர்களுடன் நிறுவனர்
திரு மோகன், மற்றும் முருகேசன்



ஐயாவுடன் திரு. ஸ்ரீனிவாசன், திரு. மோகன்,
திரு. சரவணன், திரு. முருகேசன் அவர்கள்



ஐயாவுடன் ஸ்ரீபகவத் பவன் நிறுவனர்
கோவி. இரவி தம்பதியினர்



ஐயா அவர்களுடன் நாகர்கோவில்
புறவலர் Dr. சுகமார் குடும்பத்தினர்



குழந்தையும் குழந்தை உள்ளமும்



ஐயாவுடன் அஃகு ஹீலர் அ. உமர் பாரூக் அவர்கள்

# ஸ்ரீ பகவத் பவனில் ஜுலை மாதத்தில் 2 நாள்
# ஞான முகாம்



ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் இரண்டு நாள் ஞான முகாம் வருகின்ற **ஜுலை மாதத்தில்** சேலத்தில் நடைபெற உள்ளது.

இடம் : **ஸ்ரீ பகவத் பவன்,** ஜருகு மலை அடிவாரம், கொடம்பக்காடு, பெரிய கவுண்டாபுரம், காரிப்பட்டி (Po.), சேலம் - 636 106.

நாள் : 14.07.2018 முதல் 15.07.2018 ஞாயிறு வரை

நேரம் : சனி காலை 8.00 மணிமுதல் ஞாயிறு மதியம் 3.00 மணிவரை

ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள் வெள்ளிக்கிழமை மாலையே ஸ்ரீ பகவத் பவன் வந்து தங்கிக்கொள்ளலாம். உங்கள் வருகையை முன் அறிவிப்பு செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

செலவு பகிர்வு ரூ.**1000/-** நபர் ஒருவருக்கு

செலவு பகிர்வுக் கட்டணத்தை வழங்க இயலாதவர்கள் தனிப்பட்ட முறையில் விண்ணப்பிக்கலாம்.

அனைவரும் வருக!

ஞானத்தெளிவு பெறுக...

- ஆண்கள் மற்றும் பெண்கள் தங்குவதற்கென தனித்தனி இடவசதி உள்ளன.
- ஞான முகாமில் 50 அன்பர்கள் மட்டுமே கலந்து கொள்ள இடமிருப்பதால் முன்பதிவு அவசியம்.

**முன்பதிவு செய்யும் வழிகள்**

| | | |
|---|---|---|
| M.O, D.D. (or) Cheque | : | வரைவோலை அனுப்புபவர்கள் A/c Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம். |
| Direct Payment | : | நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் கீழ்க்கண்ட வங்கிக் கணக்கில் செலுத்தலாம்.<br>**HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075,**<br>**NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem** |

**ஸ்ரீ பகவத் மிஷன்**

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3. கைப்பேசி : 9994205880, 97891 65555

## கவலைகள் அனைத்திற்கும் தீர்வு - புதிய பதிப்பு




அனைத்து அன்பு உள்ளங்களுக்கும் எங்கள் அன்பான வணக்கம்.

ஸ்ரீ பகவத் ஐயாவின் நூல்களில் பிரதான நூலான **கவலைகள் அனைத்திற்கும் தீர்வு** என்ற நமது நூல் உங்கள் அனைவரது ஆதரவுடன் பரிசளிப்பு விலையாக ரூ.**50**/-க்கு ஆங்கிலத்திலும், தமிழிலும் வெளியிட்டு வருகிறோம். இதற்கு 24 அன்பு உள்ளத்தினர் தலா ரூ. **10,000**/- வழங்கியிருந்தனர்.

அதன் காரணமாக பல்வேறு நபர்களுக்கு நமது கருத்துகளை வழங்கி உதவ முடிந்தது.

நாம் தமிழில் அச்சிட்ட இந்த நூல்கள் மட்டும் தீர்ந்து விடும் நிலையில் உள்ளது. இந்த நூலை நாம் மீண்டும் அச்சிட வேண்டியவர்களாக இருக்கிறோம்.

இதற்கு ரூ. **10,000/-** வழங்கும் **25** அன்பு உள்ளத்தினர் மட்டும் தேவைப்படுகிறார்கள் என வேண்டுகோள் விடுத்திருந்த நிலையில் இதுவரை ரூ. 10000 வழங்கிய அன்பு உள்ளத்தினர்

திரு. **சங்கரநாராயணன்,** கும்பகோணம், திரு. **ஜெயராம்,** கனடா, இவர்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

இன்னும் 23 அன்பர்கள் தேவைப்படுகிறார்கள்.

மேலும் ஜூன் மாத இறுதிக்குள் அச்சிட வேண்டி இருப்பதால் ஜூன் 15 ஆம் தேதிக்குள் வரும் பங்களிப்பை வைத்தும் பற்றாக்குறையை கடனாக பெற்றும் அச்சிட்டு நன்கொடை வந்ததற்கு தகுந்தாற்போல் விலையை நிர்ணயம் செய்யலாம் என முடிவு செய்யப்பட்டுள்ளது.

இந்தப் பரிசளிப்பில் பங்கேற்க விரும்பும் அன்பு உள்ளங்கள் கீழ்கண்ட வங்கி கணக்கில் செலுத்தி 97891 65555 என்ற எண்ணில் தகவல் தெரிவிக்கவேண்டுகிறோம்.

**HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem** என்ற கணக்கில் செலுத்தலாம்.

அன்புடன் **ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம். செல் : 99942 05880, 97891 65555

# ஜென் கதை

## "மரணக்குழி"

குடும்பஸ்தன் ஒருவன் கடவுள் பக்தி மிகுந்தவனாக இருந்தான். தன் உழைப்பையும் விட கடவுளிடம் செய்யும் பிரார்த்தனை மீது அதிக நம்பிக்கை வைத்திருந்தான். வருவாய் குறைவாக இருந்ததால் குடும்பத்தை நிர்வகிக்க மிகவும் சிரமப்பட்டு வந்தான். தான் வணங்கும் இறைவன் தன்னுடைய பிரச்சினையிலிருந்து தன்னை மீட்க வேண்டும் என்று எதிர்பார்த்தான். அவன் எதிர்பார்த்தபடி நடக்காததால் ஆன்மிகவாதிகள், சித்தர்களிடம் சரணடைந்தால் அவர்கள் தன்னை மீட்பார்கள் என்று அவர்களை பின்தொடர்ந்தான். அவனது தேவைகளும் பிரச்சினைகளும் தீர்ந்தபாடில்லை. தொடர்ந்து அவனது எதிர்பார்ப்புகள் அத்தனையும் ஏமாற்றமாகவே முடிந்தது.

இறுதியாக, ஒரு வாழும் ஞானியை சந்தித்து "எனக்கு இதுவரை யாருமே உதவவில்லை உங்களைத்தான் நம்பியிருக்கிறேன். நீங்களாவது உதவுங்கள்" எனக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டான்.

ஞானி, “சரி உன் பிரச்சினையிலிருந்து உன்னை விடுவிக்கிறேன். என்னுடன் கொஞ்ச காலம் தங்கியிரு” என்றார்.

இதுவரை சந்தித்த யாருமே தராத உறுதியை ஞானியிடம் இருந்து கிடைத்ததில் மிகவும் மகிழ்ச்சியடைந்து அவரை பின் தொடர்ந்தான்.

ஒரு மூலிகை வேண்டும் என்பதற்காக காட்டிற்கு சென்ற ஞானி இவனையும் அழைத்துச் சென்றார். அது வனவிலங்குகள் வாழும் காடு. சென்ற இடத்தில் முற்றிலும் எதிர்பாராத விதமாக சறுகுகளில் கால் இடறி யானையை பிடிப்பதற்காக இருந்த குழியில் குருவும் குடும்பஸ்தனும் விழுந்தனர்.

யானை பிடிப்பதற்கான குழி என்பதால் ஆழம் அதிகமாகவே இருந்தது. குடும்பஸ்தன் மிகவும் பயந்துபோய் அலறினான். உதவிக்கு அழைத்து எந்தப் பயனும் ஏற்படவில்லை.

குடும்பஸ்தன், "குருவே நீங்கள் தான் என்னை எப்படியாவது காப்பாற்ற வேண்டும். என்னை

நம்பிதான் என் குடும்பமே உள்ளது", என்று புலம்பினான். குரு அமைதியாக சுற்றும் முற்றும் பார்த்தார். குழியிலிருந்து வெளியே வருவதற்காக என்ன செய்வது என்று யோசித்தார். குழியில் தெரிந்த தடிமனான வேர்குச்சியை ஒடித்து குழியின் பக்கவாட்டில் ஆங்காங்கே பள்ளங்களை ஏற்படுத்தி பாதைகளை அமைத்தார். குடும்பஸ்தன், "இனி அவ்வளவுதான் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்" என்று புலம்பிக்கொண்டே இருந்தான். குருவின் முழு முயற்சியும் குழியில் இருந்து வெளியே வருவதற்கான செயலில் மட்டுமே இருந்தது. குருவின் செயலைப் பார்த்து குடும்பஸ்தன், 'இவர் எப்படியும் தன்னை காப்பாற்றி விடுவார்' என்று எண்ணிக்கொண்டிருந்தான்.

ஒரு மணிநேர முயற்சிக்கு பின் குரு பக்கவாட்டில் ஆங்காங்கே ஏற்படுத்திய பள்ளத்தில் கால் பதித்து சிரமப்பட்டு மேலேறிவிட்டார். குடும்பஸ்தனையும் இதேபோல் மேலேறி வரச் சொன்னார். பருத்த தேகம் கொண்ட குடும்பஸ்தனால் குருவைபோல் மேலேற முடியவில்லை.

குருவிடம், "குருவே நீங்கள் மெலிந்த தேகம், எளிதாக மேலேறிவிட்டீர்கள், என்னால் முடியவில்லை. எனக்கு ஏதாவது மரக்கிளையையோ மரத்தின் வேரையோ குழியில் அனுப்பி என்னை காப்பாற்றுங்கள்" என்று கெஞ்சினான். அதற்குள் மாலை மங்கி இருட்ட ஆரம்பித்துவிட்டது. இரைத்தேடும் மிருகங்களின் சப்தங்கள் கேட்கத் தொடங்கின.

குரு, "இருட்டிவிடும், இனி இங்கிருப்பது ஆபத்து, என்னால் எதுவும் உதவ முடியாது. நீயே மேலேறிவா" எனக் கூறிக்கொண்டே கிளம்ப தயாரானார்.

குடும்பஸ்தன் கதறினான். "உங்களைதான் நம்பியுள்ளேன். கைவிட்டுவிடாதீர்கள். என்னை விட்டு சென்று விடாதீர்கள். என்னை காப்பாற்றுங்கள். நீங்கள் என்ன கேட்டாலும் கொடுக்கிறேன்" என்றான்.

குரு அவன் கதறலை காதில் வாங்காமல் "என் உயிர்தான் எனக்கு முக்கியம், தாமதித்தால் என் உயிர் போய்விடும். என்னை மன்னித்துவிடு" என்று கூறிவிட்டு அவ்விடத்தை விட்டு நகர்ந்து விட்டார்.

குடும்பஸ்தன் கதறிக்கொண்டே இருந்தான். குரு அங்கிருந்து சறுகுகளில் செல்லும் காலடி ஓசையும் கேட்டுக்கொண்டு இருந்து பிறகு அதுவும் மறைந்தது.

குடும்பஸ்தனுக்கு, குரு எப்படியும் தன்னை காப்பாற்றுவார் என்ற நம்பிக்கை முழுவதும் அற்று போய் புலம்புவதை விட்டு நிற்கதியாக நின்றான். குழியிலிருந்து மேலே வானத்தைப் பார்த்தான். இருள் கவ்வத்தொடங்கியது. ஒரு புறம் வன விலங்குகளின் சப்தம் பீதியை ஏற்படுத்தியது. வேறு எந்த வழியும் தெரியாமல் குரு ஏற்படுத்திய பள்ளங்களை கவனிக்கத் தொடங்கினான். தன் உடல் எடைக்கு ஏற்றாற்போல் பள்ளங்களை அகலப்படுத்தி மேலே வர முயன்றான். ஓரிரு முறை தவறிவிழுந்து ஒரு வழியாக மிகவும் சிரமப்பட்டு இறுதியாக மேலேறினான்.

பள்ளத்திலிருந்து மேலேறிய அவனுக்கு சற்று தொலைவில் இருக்கும் பாறையில் குரு அமர்ந்திருந்தது மிகுந்த ஆச்சரியத்தையும் தனக்கு உதவாததனால் அவர்மீது கோபத்தையும் ஏற்படுத்தியது. "என்னை ஏன் காப்பாற்றவில்லை" என்று கத்தினான்.

ஞானி, "உன்னை நீதான் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். நான் உனக்கு வழியைதான் காட்ட முடியுமே தவிர உன்னை நான் சுமக்க முடியாது" என்றார்.

கொஞ்சம் நிதானத்திற்கு வந்தான் குடும்பஸ்தன். "நீங்கள் ஏதாவது ஒரு பேச்சையாவது கொடுத்திருக்கலாம்" என்றான்.

"நான் பேச்சு கொடுக்கும் வரை நீ என்னிடமிருந்து உதவியைத் தான் எதிர்பார்ப்பாய், தவிர நீயாக முயன்று குழியிலிருந்து வெளிவர முயலமாட்டாய் என்பதால் தான் முழுதும் அமைதியாக இருந்து விட்டேன்" என்றார்.

"உங்களை தான் முழுவதுமாக நம்பி இருந்தேன் நீங்கள் என்னை ஏமாற்றிவிட்டீர்கள்" என்றான் குடும்பஸ்தன்.

"நான் ஏமாற்றவில்லை. உன்னை நீயே பார்த்துக்கொள்ளும் தகுதிக்கு மாற்றிவிட்டேன். இனி வாழ்க்கை முழுதும் உன்னை நீ தான் பார்த்துக்கொள்ள வேண்டும். மற்றவர்களிடமிருந்து உதவிகளும், வழி முறையும் தான் கிடைக்கும். அதை உன்னுடையதாக மாற்றி உன் அறிவையும் சேர்த்து நீ தான் உன்னை காப்பாற்றிக் கொள்ள வேண்டும்" என்றார் ஞானி.

நம்மை காப்பாற்றிக் கொள்ள நாம் தாம் முயற்சி செய்ய வேண்டும் என்ற அனுபவத்தை ஞானியின் செயலின் மூலம் புரிந்து கொண்டான் குடும்பஸ்தன். இவ்வளவு காலம் தனக்கு இருந்துள்ள பிரச்சினையான எதிர்பார்ப்பிலிருந்து மீண்டான் குடும்பஸ்தன்.

**"நமது பிரச்சினைக்காக புலம்புவதை விட, தீர்வுக்கான செயலில் இறங்குவதே சரி"**

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698
Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020 Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555